உ
சிவமயம்

# சிவ நின்மாலிய மான்மியம்.

## இஃது
## தூத்துக்குடி
## சைவசித்தாந்த சபையாரால்
## இயற்றப்பட்டது.

அண்டபிண்ட சராசரங்களனைத்தையும் படைத்துக் காத்தழிக்கும் முத்தொழிற்கொரு முதலாகிய சிவபெருமானுடைய பெரும் புகழை ஆகமாதிகளாற் சிரவணஞ்செய்தலும், திருக்கோயில் வலம் வருதலும், அபிஷேகாதி அலங்காரங்களால் சிவபெருமானைக் கண்களிகூரக் காணலும், திரிகரணசுத்தியோடு வழிபடலும், சிவ நின் மாலியங்களை யுட்கொள்ளுவதுமே சைவர்களாகிய யாமெல்லோரு மடையற்பாலனவாகிய பெரும் பேறுகளாம், இவைகள் யாவுஞ் சிவ புண்யங்களெனக்கூறப்படும். இவற்றுள் சிவ நின்மாலியங்களின்னனவென்றும், அவற்றையுட்கொள்ளுவதாலடையும் பலன் இவையென்றும் ஒருவாறு விசாரித்தறிவாம்.

சிவ நின்மாலியங்களாகிய விபூதி, தீர்த்தப் பிரசாதாதிகளாகிய பதார்த் தங்களையன்றி சிவார்ப்பணமாகாத யாதொன்றையும் சைவர்கள் கொள்ளப் படாதென்று கூறப்பட்டுள்ளது. இதற்குப் பிரமாணம் இலிங்க புராணத்தில்,

**புஷ்பம்பலம் சுகந்தஞ்ச வஸ்திராண்யாபரணாநீச**
**சிவார்ப்பிதானி ஸ்வீகுர்யா தந்தியதாகில்பிஷீபவேத்.**

என்கிற வாக்கியத்தால் சிவாற்பிதமாகிய கந்தபுஷ்பமால்ய வஸ்திரா பரணாதிகளையே கிரகிக்க வேண்டுமென்றும், அப்படிக் கிரகிக்காமல் ஆத்மபோ கார்த்தமாய் கிரகித்த பக்ஷத்தில் பாபத்தை யடைவரென்றும் நிச்சயிக்கப் பட்டிருக்கிறது. அன்றியும் ஜாபால சுருதியில்,

**ருத்ர புக்தம் புஞ்சீத ருத்ர பீதம் பிபேத்**
**ருத்ராக் ராதம் ஜிக்ரேத் ருத்ரேணாத் தமஸ்நந்தி.**

**ருத்ரேண பீதம் பிபந்தி ரௌத்ரா க்ராதம் ஜிக்ரந்தி**
**தஸ்மத் பிராஹ்மண: பிரஸாந் தமந்ஸோ நிர்மால்ய மேவ பக்ஷயந்தி**.

என்கிற வாக்கியத்தால் சிவபுக்தமாகிய பிரசாதத்தையே புசிக்க வேண்டுமென்றும், ருத்ரபீதமாகிய ஜலக்ஷீராதிகளையே பானம் பண்ண வேண்டுமென்றும், ருத்ராக்ராதமாகிய கந்தபுஷ்பாதிகளையே ஆக்கிராணிக்க வேண்டுமென்றுங் கூறப்பட்டுள்ளது. அன்றியும் பிரமாண்டபுராணத்தில்,

**மஹ்யமந்தம் ப்ரயத்நேந நிவேத்யாச நாதியஸ்ஸதா**
**ஸயூபாலஸ் ஸர்வவேத்தா பவித்யேவ ஹிஸர்வதா .**

**அதீதா நாகதமக்ஞானம் பூபாலத் வஞ்சசாஸ்வதம்**
**ஜாதீஸ்மரத்வம் சௌந்தர்யம் அந்நவேத்யஸ்ய பக்ஷணாத்.**

என்றற் றொடக்கத்து வாக்கியங்களால் சிவ நின்மாலியத்தை எவன் புஜிப்பானோ அவன் சகலார்த்த வேத்தாவாகிச் சக்ரேசுவரனாவனென்றும், அவனுக்குத் திரிகாலக்ஞானமும், நித்ய பூபாலத்வமும், விசேஷ சௌந்தரியமும், உண்டாகுமென்றும், விஸ்தரித் துரைக்கப்பட்டிருக்கின்றது. இந்த வாக்கிய விசேஷங்களால் சிவ நின்மாலியம் பரமபாவனமாகக் கிரகிக்கத்தக்கதென்று நிச்சயிக்கப் பட்டிருக்கின்றது.

இதனை யுய்த்துணராத சிலர் சிவ நின்மாலியத்தைக் கைக் கொள்ளுவது அநுசிதமென்று கலக்கமுறுகிறார்கள். அதினந்தரங்கத்தையும் விசாரித்துத் தெளிவிப்பாம், சிவ நின்மாலியங்கள் விபூதி, தீர்த்தம், பிரசாதம், என்றற் றொடக்கத்த வாதிபொருள்களாம். சிவ நின்மாலியம் கொள்வது கூடாதெனின் அதனோடு பரமபாவனமாகிய விபூதியும் கொள்ளப்படும் பொருளாகாது. அற்றன்றேல், விபூதி சிவப்பிரசாதமன்றெனமுடியும். இது முக்காலத்தும் கூடாது. அன்றியும் இலிங்கபுராணத்தில்,

**சிவாக்ரே சிவ நின்மால்ய மகரஹீ த்வா சிவத்விஜாத்**
**ஸ்விய மேவாததான ஸசேன் நரகம் பிரதிபத்யதே.**

என்கிற வாக்கியத்தால் எவன் சிவத்விஜோத்தமா கொடுக்க வாங்கிக் கொள்ளாமல் தனக்குத் தானே விபூதி பிரசாத கந்த குஸ்மாதிகளாகிய நின்மா லியங்களைக் கிரகிப்பானோ அந்த நரன் நரகத்தை யடைவானென்று ஸ்பஷ்டமாய்க் கூறியிருக்கின்றது. இதனால் விபூதி கந்தபுஷ்பாதி என் மாலியங்கள் மறுக்கப் பட்டனவல்லவென்றும், விதிப்படி சிவத்விஜோத்தமர்களிடமிருந்து பெறற் பாலனவேயெனறும் சித்தமாயிற்று. இது நிற்க காமிகாகமத்திலும், சைவ புரா ணத்திலும்,

**அசுத்தாத்மா சுசிர்லோபாத் மத்புக்தம் பாவனம்பரம்**
**பக்ஷயேந்தா சமாப்நோதி சூத்ரோஹய த்யயன திவ.**

**நிர்மால்யம் நிர்மலஞ்சுத்தம் நிர்மலத்வா தரிந்திதம்**
**தஸ்மாத போஜ்யம் நிர்மால்யம் ப்ராக்ருதைர சிவார்ச்சகை.**

**வோபாந்ததராயேத்ச் சம்போ நிர்மால்யம் நிசபக்ஷயேத்**
**ஜிகுவாசாபல்ய சமயுக்தா சிவசம்ஸ்கார வர்ஜிதா:**
**சிவநிர்மால்ய போஜீசேத் ரௌரவம் நரகம் ரஜேத்.**

என்று கூறிய வசனத்தால் உபநயன சமஸ்காரர ஹிதர்களாகிய சூத்திரர்களுக்கு வேதாத்தியயனம் விலக்கப்பட்டிருப்பது போல் சிவபாவனார ஹிதத்வத்தால் அபரிசுத்தாளாகிய பிராகிருத ஜனங் களுக்குச் சிவநின்மாலிய சேவனம் நரகஹேது வென்று பிரஸ்தாபிக் *கப்பட்*டிருக்கிறது. இதைப்போன்ற சில ஸ்மிருதிவாக்கியங்களைக் கொண்டு அவைகளினந்தரங்க மின்னதென்றுணராது வீண்கலக்க முறுகிறார்கள். இனிச் சிவரின் மாலியத்தின் விபரமுணர்த்துவாம். பிரமாண்ட புராணத்தில்,

**சிவானு பூதமகிலம் நிர்மால்யம் பரிபாஷ்யதே**
**போஜ்யம் தாரியமிதிதுவே தாஷட்விதஞ்சபவிஷ்யதி.**

**தேவஸ்வம் தேவதாத்ரவ்யம் நைவேத்தியஞ்ச நிவேதிதம்**
**சண்டத்ரவ்யம் பஹிக்ஷிப்தம் நிர்மால்யம் ஷட்விதம்ததா.**

**தேவஸ்வம் கிராமபூம்யாதி தாசீதாச சதுஷ்டயம்**
**ஹேமரூப்ய கரத்னாதி தேவதிரவ்ய மிதிஸ்மிர்தம்.**

**யாதஸங்கல்பியச தேவாய பாத்ரம் புஷ்பம் பலம் ஜலம்**
**அந்ந பாநாதிதத் ஸர்வம் நைவேத்ய மிதிகீர்த்திதம்.**

**யேதத்திரிவித நிர்மால்யம் அநுர்கமிதி கத்யதே**
**பிரமாதாத் போஜனம் குருவந்பூமௌசஸ்ஸய தமங்களா:**

**சிவத்ரவ்யா பஹாரேண நரகம் யாத்யஸௌநரஹா:**
**சிவோபபுக் தஸிருக்கந்த மன்னபானாதிகம்ததா.**

**நிவேதிதமிதம் புரோக்தம் சர்வபா பஹரம்பரம்**
**ஸ்தாபிதவிதிவல்லிங்கம் ஸர்வைர்தேவா ஸுரைர் நரைஹி**

**ஏதத் திரிவித நிர்மால்யம் சண்டேசாதிகிர் தம்பவேத்**
**பஹீக்ஷிப்தம் அநர்ஹம்ஸ்யா தன்னியத் திரவ்யத்வ காரணாத்**

**பிஸாசானாஞ்ச சர்வேஷா மதிகாரோத்ம ஸர்வதா**
**நிர்மால்யேஷட்விதேரித்ய மேகமேவ நிவேதிதம்.**

என்றற்றொடக்கத்து வாக்கியங்களால் நின்மாலியமானது தேவஸ்வமென்றும், தேவதாத்ரவ்யமென்றும், நைவேத்யமென்றும், நிவேதிதமென்றும், சண்டாதிக்ருதமென்றும், பஹிக்ஷிப்தமென்றும் ஆறு விதங்களாய்ப் பகுக்கப்பட்டு அவற்றுள் தேவஸ்வ மென்பது சிவசம்பந்தமான கிராமபூமியாதிகளென்றும், தேவதாத்ரவ்யமென்பது சிவசம்பந்தமான சுவர்னராஜிதரத்னாதிகளென்றும், நைவேத்யமென்பது சிவார்த்தமாய் சங்கற்பிக்கப்பட்டு அர்ப்பணமாகாத அன்ன பலபுஷ்பாதிகளென்றும், இம்மூன்றுவித

நின்மாலியங்களும் சுத்தாத்மாக்களுக்கு கிராஹிபமல்லவென்றும், மேல் நிவேதிதமென்பது சிவார்ப்பிதமாய்விட்ட அன்னபலஜலாதிகளென்றும், இஃது பாவனமும் பாபஹரமுமாய் சுத்தாத்மாக்களால் கிராஹ்யமாகத்தக்கதென்றும், சண்டாதிக்ருத மென்பது "உத்தரத: சண்டீஸ்வராயநம:' என்று அர்ப்பிக்கப்பட்ட திரவியமென்றும், பஹிக்ஷிப்தமென்பது பாஹ்யதேசத்தில் வைத்திருக்கும் ஜலான்ன பத்ர புஷ்பாதிகளென்றும், இவ்விரண்டில் முதலாவது சண்டேசுரப் பிரீதிகரமும், இரண்டாவது பிசாசப்பிரீதிகரமுமாகையால் இவைகளும் சுத்தாத்மாக்களுக்கு அக்கிராஹ்யமாகுமென்று நிச்சயித்து ஒன்று கிராஹ்யமும், ஐந்து அக்கிராஹ்யமுமாக நாரதமுனிவர் கூறியிருக்கின்றன ராகையால் யாம் முன்ன ரெடுத்துக்கூறிய காமிகாகம முதலிய வாக்கியங்களின் பொருள் அக்கிராஹயப் பொருள்களாகிய ஐந்தின் மேல் நிற்குமேயன்றி சிவசமஸ்காரமடையப் பெற்ற சைவோத்தமர்களத்தியாவசியகம் அடையற்பாலனவாகிய சிவார்ப்பிதமாய் விட்ட அன்னபலஜலாதிகளாகிய நிவேதிதப்பொருள்களைப் பாதிக்க மாட்டாது. அன்றியும் பிரமாண்ட புராணத்தில்,

**நிர்மால்யஸ்லிலம்பித்வா தேவதேவஸ்வசூலின**
**க்ஷயாபஸ்மா ரகுஷ்டா த்யயை ஸத்யோமுச்யே தபந்தனாத்,**

**நிர்மால்யம் பரமம் புண்யம் நைவேத்யம்பாபநாசனம்**
**பிர்மஹசாரிகிரகஸ்தானாம் பதீனாஞ்சவிமுக்திதம்.**

**நிர்மலத்துவாச்சநிர்மால்யாணாம் தீர்மால்யயகாரணம்.**

என்னுமிந்த வாக்கியத்தால் சிவபாதோதகபானத்தினால் க்ஷயா பஸ்மார குஷ்டாதிரோகங்கள் நசிக்குமென்றும், பரமபுண்ணியமாகிய சிவ நின்மாலியம் பாபக்ஷயமென்றும், பிரமசர்யகிருகஸ்தாதி எதிகளுக்கும் முக்யப்பிரதாயக மென்றும், நிச்சயிக்கப்பட்டது. அன்றியும் சைவசம்ஹிதையில்,

**அநர்ஹமமநைவேத்யம்.**

என்கிற வாக்கியத்தால் எம்முடைய நின்மாலியம் அபோஜ்ய மென்று சிவபெருமான் கூறியதென்னை யெனக்கேட்ட சைமினி பகவானுடைய சந்தேகமொழியும்படி,

தேவதேவஸ்யவடஸோ விஷயோயம் நபைமினே

எவீரபத்திரஸபிதா ஸிவபக்திபார்ங்முகா

ஸம்போரங்கியத்ரதேவேஷ ஏபக்தா ஏந் தீக்ஷிதா

தேஷா மநர்ஹமீஸஸ்யம் தத்பிரஸாதசதுஷ்டயம்.

என்கிற வாக்கியத்தால் வீரபத்திரமூர்த்தியால் சபிக்கப்பட்டவர்களும், சிவபக்தி விமுகர்களும், சிவபெருமானை விட்டு அன்னிய தெய்வங்களிடத்து பக்தி செய்பவர்களும், சிவதீக்ஷா சமஸ்காரமில்லாதவர்களுமாகிய அந்திகாரிகளுக்குத்

தமது நின்மாலியங்கிராஹ்ய மாகாதென்று சிவபிரானருளினதாக வியாச பகவான் உபதேசித்த உண்மையால் வெளியாகிறது. இதனால் சிவநின்மாலியம் அதிகாரி களால் கிரகிக்கத்தக்கதேயென்று பரிஷ்காரமாய்க் காணப்படுகிறது. இன்னுமிவை போன்ற சில ஸ்மிருதி வாக்கியங்களிருப்பினும் இதன் தலைப்பின் கண்ணே ஜாபால சுருதிவாக்கியமொன்றெடுத்து உதகரித் திருக்கின்றோ மாகையால், சுருதி ஸ்மிருதிகளுக்குப் பரஸ்பர விரோத முண்டாகிற பட்சத்தில் ஸ்மிருதியை க்காட்டிலும் சுருதிப் பிரமாணம் பலிஷ்டமுடையதென்று,

**ஸ்ருதியமிருத்யோர்விரோதேது ஸ்ருதிரேவபலியஸி.**

என்னும் வாக்கியமிருப்பதால் முன்னரே பிரபலநியாயங்களால் சிவநின் மாலியம் கிராஹியயோக்யமென்று நிரூபித்திருப்பதாலும் விரிவஞ்சி இம்மட்டோடு நிறுத்தினோம். இனி அந்நின்மா லியங்களைக் கொள்வதாலடையும் பயனையும், சற்று விசாரிப்பாம்.

**உபவாசஸஹஸ்ராணி ப்ரஜாபத்யாயுதானீச**
**சிவப்ரஸாதசித்தஸ்ய கோட்யம்ஸேனாபிமேஸமா.**

**பத்ரம்புஷ்பம்பலம்தோய அந்நபானாதிகோஷதம்**
**சிவார்பணம்வினாபுஞ்சேத ஸத்யோபவதிகில்பிஷி.**

என்னும் வாக்கியத்தால் ஆயிரம் உபவாசங்களும், பிரஜாபத்ய கிருச்சிராதிகளும், சிவ நின்மாலியமாகிய சிவப்பிரசாத பாதோதக கிராஹிப்புண்ய பலங்கட்குக் கோடியமிசத்திலொன்றுக்கும் சமானமாகாதென்று பெறப்படுதலால் அரும்பெறற் செல்வமாகிய சிவநின்மாலியப் பிரசாதங்களை சிவ தீக்ஷாபரராகி கைக்கொண்டு, ஆணவாதி மலங்களையகற்றி, பிறவியென்னும் பெருங்கடலை நீந்தி நித்தியாநந்த நிரதிசயவாழ்வென்னு மோக்ஷக்கரையேறுவாரென்று நம்புகிறோம்.

சில்வாணாளும் பல்பிணியுமுடைய மானுடயாக்கையானது, நீரிற்குமிழிபோ னிலையற்றதாகையால், அன்பர்கள் யாவரும் இம்மையிலே செய்யற்பாலனவாகிய சிவ தருமங்களை விரைவிற் செய்து, பலன் பெறுவார்களாக. 'நாளை நாளை யென்பீராகில் நமனுடைய முறை நாளாவது மறியீர் நம்முடைய முறை நாளாவது மறியீர் ஆகையால் "காலைச்செய்வோ மென்றறத்தைக் கடைப்பிடித்துச் சாலச்செய்வாரே தலைப்படுவார்" என்றபடி உடனே முயன்று "காற்றுள்ள போதே தூற்றிக்கொள்' என்னும் வாக்கியத்திற் கிணங்கக் கரையின்றிப் பெருகிக்கிடக்கும், சிவானுபூதிப் பெரும் க்ஷராப்தியில் இயன்ற அளவு நுகர்ந்து கொள்ளக்கடவர்கள்,